

38[illegible]

முருகக்கடவுள் துணை. [illegible] யம

# திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

# கும்பாபிஷேகத்தோத்திரம்.

# தெய்வீகயாத்திரை விளக்கம்.

இவை

சாதிசமயாசாரமாதி நூலாசிரியரும்

கோயிலூராதீனம்

ஞானதேசிகர்-ஸ்ரீமத் - பொன்னம்பல சுவாமிகளின்

தொண்டர்களி லொருவரும்

சாதுக்களுக்குத் தொண்டு புரிபவருமாகிய

அரிகரபாடி சின்னையா முதலியாரால்

இயற்றப்பட்டன.

சென்னை,

கம்மர்ஷியல் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1905.




Acc. No. 45524

## மேற்படி யாத்திரையில் போஜன ரெயில் செலவு முதலியவைக்கு உதவியவர்கள்.

### ஆரணி.

ம-n-n-ஸ்ரீ சபாபதி செட்டியார் அவர்கள் ஷராப்பு.

### போளூர்.

ம-n-n-ஸ்ரீசுப்பிரமணிய செட்டியார் அவர்கள் ஷராப்பு.

### திருவண்ணாமலை.

சோயிலூர் ஸ்ரீமத் சாந்தப்ப சுவாமிகள் அவர்கள் ஈசான்ய மடம்.

### சிதம்பரம்.

கோ. ஞானதேசிகர் ஸ்ரீமத் வீரப்ப சுவாமிகள் அவர்கள்

### திருநெல்வேலி-நரசிங்கநல்லூர்.

ஸ்ரீ கநுனாந்த சுவாமிகள் ம-n-n-ஸ்ரீ சாமியாசாரியாரவர்கள்.

### திருநெல்வேலி.

ஸ்ரீமத் அம்பலவாண சுவாமிகள் அவர்கள் திருநெல்வேலி மடம்.

திருநெல்வேலி ஜில்லா சிவாலயதேவஸ்தானம் கமிட்டியார் ம-n-n-ஸ்ரீ திருமலையப்பபிள்ளை அவர்கள்.

ஆழ்வார் திருநெல்வேலி.

ஸ்ரீமத்—திருவாவடுதுறை ஆதீனசுவாமிகள் அவர்கள் மடாதிபதி.

ம-ள-ள-ஸ்ரீ சண்முகம் பிள்ளை அவர்கள் சிவாலய தேவஸ்தானம் மானேஜர்.

திருச்செந்தூர்.

ஸ்ரீ சுப்ரமண்ய ஆலய தேவஸ்தானம் மானேஜர்.

சிந்துபூந்துறை.

ம-ள-ள-ஸ்ரீ வெங்கிடசாமி பிள்ளை அவர்கள் ஸ்ரீமத் வேத நாயகம்சுவாமிகள் ஒருர் சிரஸ்தார்.

குற்றாலம் தென்காசி

ம-ள-ள-ஸ்ரீ வேலாயுதம் பிள்ளை அவர்கள் சிவாலய தேவஸ்தான மானேஜர்.

மதுரை.

சங்கப்ப சுவாமிகள் வேதாந்தி ஸ்ரீ பிரமானந்த சாமிகள் மடம்.

ஸ்ரீமத் செல்லப்பசுவாமிகள் அவர்கள் ஸ்ரீமத் குட்டையர் ஸ்வாமி மடம்.

ம-ள-ள ஸ்ரீ சக்தசாமி பிள்ளை அவர்கள் மினும்பிகா பிரஸ் தலைவர்,

ம-ா.ா-ஸ்ரீ தெய்வசிகாமணி முதலியார் அவர்கள் டிப்டி-ஸ்கூல் இன்ஸ்பெக்டர்.

ம-ா-ா-ஸ்ரீ பாண்டித்துரைதேவர் அவர்கள் தமிழ்ச்சங்கம் தலைவர்.

திருசிரபுரம் உரையூர்.

ம-ா-ா-ஸ்ரீ வைத்தியலிங்காசாரி அவர்கள்-வித்வான்

ம-ா-ா-ஸ்ரீ பெருமாள்செட்டியார் அவர்கள் - வேதாந்தி வியாபாரி.

விராலிமலை.

புதுக்கோட்டை மகாராஜா-சப்ரிஜிஸ்டரார், அவர்கள்.

ஸ்ரீரங்கம்.

சௌபாக்கியவதி சுப்புகுட்டி அம்மாள் வேதாந்தவிசாரணையுள்ளவர்கள்,

ம-ா-ா-ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை அவர்கள் வியாபாரி.

ம-ா-ா-ஸ்ரீ, கோமுட்டி செட்டியார் அவர்கள் வியாபாரி.

தஞ்சாவூர்.

ம-ா-ா-ஸ்ரீ குப்புசாமி ராஜா அவர்கள் விருத்திப்பிரபாகரம் வெளியிட்டவர்.

ஸ்ரீமத் செல்லப்பசுவாமிகள் ஸ்ரீமத் பால்சுவாமிமடம்,

## கும்பகோணம்.

ம-ா-ா-ஸ்ரீ பத்ரசாமிசெட்டியார் அவர்கள் முனிசிபாலிடி கமிஷனர்.

ம-ா-ா-ஸ்ரீ பொன்னுசாமி பிள்ளை அவர்கள் ஸ்ரீ மௌன சாமி மடம்.

ம-ா-ா-ஸ்ரீ கோவிந்தசாமிநாயுடுஅவர்கள் புத்தகக்கடை.

ம-ா-ா-ஸ்ரீ பட்டணம் ரத்தின முதலியார் அவர்கள் வியாபாரி.

சௌபாக்கியவதி செல்லம்மாள் வேதாந்த விசாரணையுள்ளவர்கள்-உபாத்தியார் பெண்கல்விசாலை.

## சாமிமலை.

ஸ்ரீமத் சிற்றம்பல சுவாமிகள் அவர்கள் சாமிமலை மடம்.

ம-ா-ா-ஸ்ரீ வெ. அ. ரு. வெள்ளையன் செட்டியார் ஆலயத் திருப்பணி செய்பவர்.

## கொட்டையூர்.

ம-ா-ா-ஸ்ரீ ரங்கசாமி செட்டியார் அவர்கள் சுகஜீவனம்.

ம-ா-ா-ஸ்ரீ ஜெகநாதசெட்டியார் அவர்கள் சுகஜீவனம்.

## புதுப்பாளையம்.

ம-ா-ா-ஸ்ரீ லக்ஷிமய்ய நாயுடு அவர்கள் பென்ஷன் எட்ஷிராப்பு.

மயிலம்.

ஸ்ரீமத் சிவஞான பாலைய சுவாமிகள் அவர்கள்.

ஸ்ரீ சுப்பிரமண்யர் கோயில் தர்மகர்த்தா.

கிளியனூர்.

ம-ா-ா-ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார் அவர்கள் பயிர்க்குடி.

காட்டாம் பாக்கம்.

ம-ா-ா ஸ்ரீ ரங்காரெட்டியார் கேசவுலுரெட்டியார் அவர்கள் பயிர்க்குடி..

இரும்பை ஆலங்குப்பம்.

ம-ா-ா, ஸ்ரீ வெங்கிடசாமி நாயுடு அவர்கள் இரும்பை ஓஸ்ரீ ங்கியாபட்டு ஆலயதர்மகர்த்தா.

உ

கடிதங்கள்

சிதம்பரம் திருவண்ணாமலை.

கோ-சி-ம. குரோதிவருஷம் கார்த்திகைமாதம் 22தேதி

இப்பவும் தங்கள் கார்டு கிடைத்தது ஏற்கனவே தங்கள் புஸ்தகம் இவிடத்துக்கு அனுப்பிக்கொண்டிருக்கும்போது மேற்படி புத்தகங்களை ஸ்ரீ சுவாமிகள் அடிக்கடி பார்த்து ரொம்ப சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் தங்களைப்பார்க்கவேணுமென்று சொல்லி க்கொண்டு கடிதமும் எழுத உத்திரவாச்சுது.

அந்தப்படி எழுதத்தங்கள் மேல்விளாசம் பூர்த்தியாய்தெரியாததால் எழுதவில்லை—ஸ்ரீ சுவாமிகளை மடத்தில்தான் அடக்கம் செய்தது, மாநபடி மடத்துக்கு இன்னம் ஒருவரும் ஏர்ப்படவில்லை—ஸ்ரீமது கோவிலூர் சுவாமிகள் ஏர்ப்படுத்திய பின்பு தெரிவிக்கிறோம்.

வேணும்

சற்குருநாதன் ருவே

குரோதி வருஷம் கார்த்திகைமாதம் 13-தேதி ஞாயிற்றுக்கிழமை நீ எடுத்த முயற்சியை அண்ணாமலையார் கூட்டி முடிப்பார். இந்த ராஜாக்களைப் புகழ்வதைப்பார்க்கிலும் தேவக்கோட்டை செட்டி பிள்ளைகளைக்கைப்பிடித்தால் வேண்டிய பொருளுதவி செய்வார்கள். அந்தபிரகாரம் நாடு. இப்பெரியபட்டணத்தில் சாதுக்கள் தங்கி வசிப்பதற்கு இடமில்லாதது மகாதுர்லபமாயிருக்கிறது.

இப்படிக்கு
மௌனகுரு தேசிகர்
ஆசீர்வாதம்.

சென்னை வியாசர்பாடி க்ஷேத்திரத்தில் யாத்திரையாய் வந்த சாதுக்களில் கோவிலூர் ஆதினத்தார் கொடுத்த நன்கு மதி புகைக...

சர்வஞ்சின்மயம்.

இதனால் அன்பர்களியாவர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில் அ-சின்னையாமுதலியார் சென்னை வியாசர்பாடி க்ஷேத்திரத்தில் போத்துரெட்டிக்கால் தோட்டத்தில் கட்ட முயன்றிருக்கும் சாதுசங்கசாலை திருப்பணியானது மேற்படி தோட்டத்தைப் பார்வையிட்டயான் மெய்யடியார்களுக்கு உபகாரமாகவும், மிக்க சவுக்கியமாகவு மிருக்குமென்று நம்புகிறேன். ஆதலால் புண்ணியவான்கள் யாவரும் உதவிசெய்யவேணடியது.

விஜயவருஷம் வைகாசிமாதம் 25தேதி

இங்ஙனம்

கோயிலூர் ஆதீனம் ஸ்ரீமான் பொன்னம்பல சுவாமிகள் மாணாக்கன் செல்லப்பசாமி.

1905வருஷம் நவம்பர்மாதம் 21தேதி விளம்பிவருஷம் கார்த்திகைமாதம் 7தேதி சோமவாரம் அடியேன் மேற்படி தோட்டத்திலுள்ள தடாகத்தில் ஸ்நானம்செய்துவந்தேன். அதில் சாதுக்களுக்காக ஒருகுடிசையிருக்கிறது. சாதுக்கள் வசிக்க நிர்ச்சிந்தையான விடமிருக்கிறது. ஆதலால் அன்பர்கள் உதவிசெய்து மேற்படி சாதுசங்கசாலையை நிறைவேற்றினால் மிகுந்த ஆத்மலாபத்தை அடையும்படிக்கு ஏதுவாயிருக்கும்.

இப்படிக்கு

குமாரசாமி.

சமீவன க்ஷேத்திரமென்னும் கோயிலூர் முத்துராமலிங்க சுவாமிகள் ஆதினத்துக்குரியவீரப்பஞானதேசிகசுவாமி மாணாக்கன்

விகாரிவருஷம் பங்குனிமாதம் 21தேதி இரண்டு பகலும் ஒரு இரவும் மேற்படிதோட்டத்தில்வசித்தோம் மேற்படி தோட்டம் சாதுக்கள் வசிப்பதற்கு ஏகாந்தமாயும் சமீபத்தில் வியாசர்பாடி சிவக்ஷேத்திரத்தையுடையதாகவும் இருக்கிறபடியால் சுவாமி தரிசனத்துக்கும் பிரவஞ்திகளுக்கும் மிகவும் சவுகரியமான விடமே ஆனபடியால் மேற்படி சின்னையாமுதலியாரது முயற்சியாக கூடவேணுமென்று பரமேஸ்வரனைப் பிரார்த்திக்குரேம். மேற்படி கயிங்கரியத்துக்கு அன்பர்கள் உதவிசெய்து பூர்த்திசெய்யக் கோருகிறேம். மேற்படி தோட்டத்தில் ஒருதடாகமிருக்கிறது அதில் பங்குனி மாதத்திலும் சலம் தாராளமாயிருக்கிறது. மற்ற காலங்களில்சலசவுக்கியமென்பது சொல்ல வேண்டாம்.

இங்ஙனம்
கோ-சிதம்பரம் ஸ்ரீமத்-பொன்னம்பல சுவாமிகள் மாணாக்கன் சுப்பராய சுவாமி
கும்பகோணம் ஸ்ரீமத் மௌன சுவாமிகள் பாததூளி சிரமேற் கொண்ட அடியேன்-கும்பலிங்க பரதேசி.

உ

முருகக்கடவுள் துணை.

# திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேஸ்வரர் கும்பாபிஷேகத் தோத்திரம்.

## காப்பு.

வெண்பா.

சித்திக்களிறே சிறியே னிடர்தீர்த்துப்
பத்தியுடன்பாடலருட் பாலித்திட்-டித்தரையில்
தொண்டரடிக்கென்றுந் தொழும்புசெயவருளுன்
புண்டரிகத்தாள்போற்றும் போது.

## முருகக்கடவுள்துதி.

அருணகிரியார்க்கன் றருட்சுரந்த நாதா
குருமணியே யேழையின்றன் கோதாம்-பெருங்குறையை
நீக்கியேயாட்கொண்டு நின்னடியார்பாற்சேரும்
பாக்கியமு கச்செய் பரிந்து.

## அண்ணாமலையார் உண்ணாமுலையார் துதி.

அண்ணாமலையானே யாண்டவனே யென்றன்னைக்
கண்ணாலே நோக்கிக்கடாக்ஷிப்பாய்—உண்ணா
முலையாளே யென்னையாள் மூதறிஞர்சாலை
நிலையாகச்செய்தே நிலத்து.

## நூல்

### வெண்பா.

சீர்கொண்டருணகிரித் தேவனே யென்றென்றும்
பேர்கொண்டோரேத்தும் பெருமானே—யேர்கொண்ட
வேழைதுயர்நீக்கி யின்பந்தனையருளி
யூழை யொழிப்பா யுவந்து. 1

ஐயாவருணகிரி யத்தாவுனைக்கண்டோர்
மெய்யாஞ்சுகம்பெற்று மேலானார்—பொய்யாம்
உலக மயமாகி யுழலுகின்ற நாயேன்
நலமடையவெதன்றேரு ணில். 2

நான்மறைக்கு மெட்டாத நாயகனேயென்றென்று
நான்முகனுங் காணாத நல்லோனே—யூன்பெருக
நின்றுகாலங்கழிக்குந் தீயேனுனைக்காண
வென்றுதா னாள்வருமோ விங்கு. 3

சோணகிரி தேவனே தூயவனே யென்னுடைய
வானவமெல்லா நீக்கியாட்கொண்டே—காணவொணா
வுண்மை நிலையருளி யூழ்வினையை மாற்றியான்
வண்மையுறச் செய்வாய் மகிழ்ந்து. 4

தக்கனார் வேள்வி தனைபொழிந்தே யன்னவர்க்கு
மிக்கதுயர் விளைத்த மேலோனே—யிக்கணமே

பேடாகோ டப்புரியு மென்றாழ் வினையென்னை
நாடா விதஞ்செய்வாய் நன்று. 5

புட்டுக்கு மண்சுமந்த புண்ணியனே சோணேசா
மட்டுப்படாவினைமை மாசறுத்துத்—தட்டுபடா
மெய்ஞ்ஞான மிக்கருளி மேலோர்பாற் சேர்த்திட்டே-
யஞ்ஞான நீப்பாயே யாய்ந்து. 6

மார்க்கண்டர்க் காக வன்காலனையுதைத்துப்
பார்க்குளடி யார்கட் பயந்திர—காக்கவந்த
சோணசலனே தூயவனே நான்மறையுங்
காணுநிலை யருள்வாய் காண். 7

நரியைப் பரியாக்கி நற்றென்னோர்க்கீந்த
துரியவருணகிரித்தூயோ—யரியநிலைப்
பெற்றபெரி யோர்கட் பெருங்கூட்ட மேசேர்ந்து
நற்றவமே செய்யச்செய் நன்று. 8

வஞ்சப் பிறப்பறுக்கும் வல்லவனேசோணேசா
நஞ்சமென்றேயடைந்துதாழ்ந்திட்டேன்—அஞ்சேலென்
றுட்கொண்டருளியே யையாவுன்னற்புதமாந்
தாட்பணியச் செய்வாயே சார்ந்து. 9

விடமுண்ட சோணேச விரன்கழல்கள்
திடமுடனே நெஞ்சேநீசிந்தி [illegible] டமுடியா

துன்பமெல்லாநீங்கியே தூயனாநட்காளாகி
யின்பந் தனைப்பெருவாயிங்கு. 10

துன்பக்கடலாந் தொலையாப்பிறப்பிறப்பை
யின்பமெனவேபற்று மேழையே—னென்புருக
சோணேசா வென்றுன்னைத் தோத்திரஞ்செய் தேநாளு
நாணம் விட்டுய்வேனோநான், 11

பார்வதி தேவிக்கே பாதியுடலைக்கொடுத்துப்
பேர்பெறவே செய்த பெருமானே—நீரெந்தன்
றுன்பந் தனையொழித்துத் தூய நிலைவிளக்கி
யின்பமே யீவா யிசைந்து. 12

வல்லாள ராஜனுக்கு வாழ்வளிக்க வேவந்த
நல்லோனே யென்னுளத்து நாயகனே—யெல்லாரும்
போற்றுமரவாபரணா புண்ணியனே சோணேசா
மாற்றுகவென் குற்ற மகிழ்ந்து. 13

திருவருளையண்ணாலே தேவனேயெந்தன்
கருவறையை நீக்கக்கனிந்தே—யொருபொருளை
யோதிச்சுகநிலையிலூன்றியே நாடோறுஞ்
சாதிக்கச்செய்குவாய் சார்ந்து. 14

காட்டுக்கோட்டைநகரார் நாடியுனக்கியற்றுங்
கேட்டமுறுங்கும்பாபிஷேகம்போல்—வெட்டெனது

எண்ணப்படியேசோ ணேசனே சம்சங்கம்
மண்ணின்மேற் செய்கவருண் மற்று. 15

சென்னை வியாசர்பாடி க்ஷேத்திரத்திற் சம்சங்கம்
உன்னிதமாய்க் கூடுதற்கே யோர்சாலை—யன்னவராற்
கட்டுவித்தே யன்பாகக் கற்றுணர்ந்தோ ருக்கன்னந்
திட்டமுடனீயச்செய் சேர்ந்து. 16

கோயிலூராதீனக் குற்றமற்றோரைப்பாடி
நாயினேனு * மனுப்பிநாடுவதைத் தாய்போன்ற
நல்லோன்வீ ரபபனெனு ஞான தேசி கன் பார்த்துச்
சொல்லாற் கைகூட்டச் செய்தோய்ந்து. 17

---

1 ஸ்ரீ—பொன்னம்பல சுவாமி கும்பா
பிஷேகத் தோத்திரம்
2 ஸ்ரீ—தத்துவராயர் கும்பாபிஷேகத் தோத்திரம்
3 ஸ்ரீ—ஏகாம்பரநாதர் கும்பாபிஷேகத் தோத்திரம்
4 ஸ்ரீ—இராமை யாக்கினர் கும்பாபிஷேகத் தோத்திரம்
5 கோயிலூராதினம் ஸ்ரீஞானதேசிகர்கள் தோத்திரம்
6 ஸ்ரீஇராமையாக்கினர்தோத்திரம்கும்பாகம் அச்சில்லை
7 கோயிலூர் ஸ்ரீகொத்தவாளீசர் தோத்திரம்
8 ஸ்ரீ அருணாசலேஸ்வரர் கும்பாபிஷேகத் தோத்திரம்
9 கோ—சி—ஞானதேசிகர்
ஸ்ரீ—பொன்னம்பல சுவாமிகள் பரிபூரணமாலை

அண்ணாமலை வாழி—யாழிநதேரோட் செய்வாழி
முண்ணாமுலைவாழி யோங்குகுளக்—கண்ணாரும்
ஒற்றைமாநப் போன்வாழி யும்பரொடு நால்வர்களுங்
கற்றவரும் வாழிமனி காண். 18

பொன்னம்பலசாமிப் புண்ணியருஞ் *சாலையினை—சாது
[சங்கசாலை
யுன்னிக்கை கூட்டவே யோதியதை—தன்னடையார்
கேட்டபடி யேமுடித்துக் கெம்பீரமேனிலையில்
நாட்டமுற்றே வாழ்வார் நயந்து. 19

விசுவாவசுவிஷப மேன்முப்பதாம்நாள்
பசுபதியண்ணாமலையார் பாரில்—திசம்விளங்கும்
உண்ணா முலைக்கோயிலுத்தம நாட் டார் புதுக்கிக்
கண்ணாரக் கண்டார்கள் காண். 20

பாரிலுளயான் றனியைப் பன்னுவட்டுக்கோட்டையரே
சிறுறவே புதுக்கிச் சிறுற்றார்—ர நறமிச்
சென்னையிலு மோர் மடத்தைச் செய்குவரே லென்றுரான்
மன்னுவரே மாட் புகழை வாய்த்து. 21 [ஸ

ஸ்ரீ அருணாசலேஸ்வரர் கும்பாபிஷேகத் தோத்திரம்.

முற்றிற்று.

முருகக்கடவுள் துணை.

# தெய்வீகயாத்திரை விளக்கம்.

ஒன்றை நினைக்கவது வொழிந்திட்டொன்றாகு
மன்றி யதுவரினும் வந்தெய்து—மொன்று
நினையாத முன்வந்து நிற்கினு நிற்கு
மெனையாளு மீசன்செயல்.

வடதேச தென்தேச யாத்திரை சாதுக்கள் பக்தர்களுக்குத் தரிசனந்தர சென்னைமாநகரம் பானுபுரிஎன்னும் வியாசர்பாடி க்ஷேத்திரத்தில் தங்கும்படிக்குச் சாதுசங்கசாலை என்னும் ஒருமடாலயம் கைகூட்டும் புண்ணியர்கள் நேரிடவில்லை என்று வெகுகாலமாய் வியாகூலத்திலாழ்ந்த அடியிற் கையொப்பமிட்ட அடியேன் குரோதிவருஷ மத்தியில் ஒருமூலிகை வைத்தியசிரோன்மணியையடுத்து வைத்தியசாலைவைக்க இந்த மூலிகா அவுஷதவிளக்கம் என்று பத்திரிகை அச்சிட்டு வெளியிடு முயற்சியிலிருந்த போதுமுன்பின் நினையாமலே ஷை யாத்திரைசெய்ய நேர்ந்ததால் இதனை ஷை கவியின்படி தெய்வீக யாத்திரை என்று கூறலாகியது—இந்த யாத்திரையால் ஷை சாதுசங்கசாலை கைகூடுங்காலம் நேர்ந்திருக்

கின்றது, இதைப்பார்வையிடும் சாதுக்கள், பக்தர்கள், நாட்டுக் கோட்டை நகரத்தார் முதலியயாவரும் வெறுப்புறாமல் முழுதும் கவனத்துடன் வாசித்துக்கருத்தில் வைத்து மேற்படி சாதுசங்கசாலை கைகூடி அபிவிருத்தியாக அவரவர் சபநபத்தில் கடவுளைப் பிரார்த்திக்கவேண்டு கின்றனன்.

மேற்படி சாதுசங்கசாலைகயிங்கரிய எண்ணமானது, இங்கிலீஷ் 1872-வருஷம் ஜோற்பத்திவருடம் தைமீ ஸ்ரீகாசியாத்திரைசென்று சென்னைவந்து அடியேனிடம் சிலகாலமிருந்து எனது தொண்டையேற்றகோயிலூர் ஞானதேசிகர்—ஸ்ரீமத் பொன்னம்பல சுவாமிகள் எழுந்தருளியிருந்த சத்திரமானது மாறியதில் அவர்முகம் வேறுபட்டதைக்கண்ட அடியேனுள்ளத்தில் எழுந்தது.

அக் கயிங்கரிய முடிக்க உன்னாலாகாது முடிதரித்தோன் சடைதரித்தோன் முடிக்கவேண்டும் விட்டுவிடு என்று என் சிரியதந்தை தடுத்தும் அவர்வாக்கை கேளாமல் முயன்று தாயாதி துன்பத்தில் பட்டகஷ்ட நஷ்டத்தால் உபாசனா மூர்த்தியைச் சிந்தித்திருந்ததில் கவிபாடும் வாக்குண்டாகி உபாசனா மூர்த்தியைப்பாடி தா

யாதி துன்பசாரம் பஞ்சாயத்தார் குணநிசயம் முதலிய பலநூல்கள் செய்து அச்சிட்டு வெளியிட்டபிறகு (அனேவோர்க்குத்தெய்வம் இலைமுகப்பைம் பூணிறை) என்ற படிமுடிதரித்தோனாகிய ஸ்ரீ எட்வர்ட்செவன்த் என்னும் இந்தியா சக்ரவர்த்தியை அவர் மகுடாபிஷேகத்தில்பாடி சடைதரித்தோனுக்குச் சமானமானவரும் ஷை சாதுசங் கசாலை கைங்கரிய எழுச்சிக்குக்காரணருமான ஷை ஞானதேசிகர்—கோ—சிதம்பரம்—ஸ்ரீமத்—பொன்னம்பல சுவாமிகளை 8-தடவையும்—ஷை ஆதீனம் ஞானதேசிகர் கோயிலூர்ஸ்ரீமத்-வீரப்பசுவாமிகளை 4-தடவையும் இவர்களுக்கு முன்னோர்களை ஒருதடவையும் பாடலாகியது.

சக்ரவர்த்தி புறச்சமயத்தினரானதால் அவர் மேற்படி சாலையைநிறைவேற்றுவது கூடாதாயினும், அவர் குடிகளாகிய நம்மில் சடைதரித்தோனுக்குச் சமானமாகிய சாதுக்களான மேற்படி கோயிலூராதினர்கள் இந்துமதஸ்தரும் கவியினருமை தெரிந்த வித்வசிரோன்மணிகளும் மகான்களும் சிவ ஆலயத்திருப்பணியே விரதமாயுள்ள புண்யசிரோன்மணிகளான நாட்டுக்கோட்டை நகரத்தாரைச்சார்ந்தவரு மானதால் தென்தேசமுழுதும் பரவிய தங்கள் சந்ததிகள் யாத்திரையிலும் அவர்கள் செ

ன்னையில் தங்கமிகுந்த சவுக்கியமாயிருக்கு மென்பதைக் கருதி ஸ்ரீநடேசர் இளமையாக்கினார் முதலினர் ஆலயங்களைப்புதிக்கிக் கும்பாபிஷேகஞ் செய்தபடி மேற்படி சாது சங்கசாலை கைங்கரியத்தையும் கைகூட்டி அபிவி த்திநயாகச்செய்வார் களென்றே நம்பி பாடலாகியது.

மேற்படி ஞானதேசிகர் கோ-சிதம்பரம் சுவாமிகள் அடியேன் கவிபாடும் வாக்குப்பெற்ற முதல் பாடிவெளி யிட்ட சுமார் 50-நூல்களையும் பார்வையிட்டுச் சந்தோஷி த்தனர்கள்.

இளமையாக்கினார்க் கும்பாபிஷேகத்தில் மேற்படி சுவாமிகள் அடியேனது யோக்கியதையும் மேற்படி சாது சங்கசாலை கைங்கரியத்தில் எனது சித்தமமூர்த்தி பித்தன் போலாகியதையும் மேற்படி ஞானதேசிகர் கோயிலூர் சுவாமிகளிடமும் சிலசெட்டிமார்களிடமும் கூறிமிகுந்த சந்தோஷமுற்றனர்கள். இளமையாக்கினார் கும்பாபிஷே கத்தோத்திரவெண்பாவை மேற்படி செட்டிமார்களுக்கு க்கொடுக்க விருப்பங் கொண்டிருந்தார்கள். சில அசந்தர் ப்பத்தால் தடைப்பட்டது. மேற்படி கோயிலூர் சுவாமி களும்—மேற்படி கோ—சிதம்பரம் சுவாமிகளுடைய இ

ஷ்டப்படி செய்வோமென்று கூறியதாகவே தோன்றுகி றது. நிற்க.

இளமையாக்கினர் கும்பாபிஷேகத்தின் பிறகு அடி யேனுக்குக்கொதிப்பினற் சுரம் நேர்ந்து வெகுகாலமாய்ப் போராடியதால் மேற்படி சுவாமிகளைக் காணக்கூடவில் லை. குரோதிவருடம் மத்தியில் (சார்வரி ஞு வைகாசிமீ இளமையார்க்கினர் கும்பாபிஷேகம் முடிந்த மறுதினமு தல்பாடிய) இளமையார்க்கினர் தோத்திரம் 2-வதுபாகத் தையும் சக்ரவர்த்தி மேல்பாடிய மகுடாபிஷேக நூலையும் கோயிலூர் கொத்தவாளீஸ்வரர் தோத்திரத்தையும் கை யெழுத்து புத்தகமாகவும் இன்ன சில புத்தகங்களும் சே ர்த்து மேற்படி கோ — சிதம்பரம்—சுவாமிகளுக்கு ரிஜிஸ் டர் செய்து அனுப்பி கொதிப்பு சுரம் நீங்கியபிறகு சித ம்பரம்போக யோசித்திருந்தனன்.

இப்படியிருக்க சென்னையில் வந்திருந்த ஸ்ரீமௌன குருதேசிகர் என்னும் யோகீஸ்வர சுவாமிகள் யாத்திரை வரும் சாதுக்கள் இப்பெரிய பட்டணத்தில் தங்கிவசிப்ப தற்கு இடமில்லாதது மகா துர்லபமாயிருக்கிறது ஆதலா ல்முயற்சியை விடாதே என்று அனேகமகான்களும் சாது க்களும் கூறியதுபோலவே கூறிகார்த்திகை தீபத்தில் அ

ண்ணுமலையை 5-நாள் பிரதக்ஷணஞ்செய் மேற்படி சாலே சீக்கிரத்தில் கைகூடு மென்றனர்கள். அவர் உத்திரவுபடி கொதிப்பு சுரத்தையும் பிளேக்காபராவையும் நோக்காமலே அண்ணுமலே சென்றனன்—உடனே ஈசான்யத்தில் கோயிலூர் ஆதினம் ஸ்ரீசாந்தப்ப சுவாமிகள் மடத்தில் அடியார்களுடன் எழுந்தருளிய ஸ்ரீமத் கோயிலூர் சுவாமிகளின் அடியார்கள் மேற்படி ஆதினம் கோ—சிதம்பரம் சுவாமிகள் பூரணப்பட்டதாய்க்கூறக் கேழ்வியுற்று மனங்கலங்கி சிதம்பரத்திலுள்ள மேற்படி சுவாமிகளின் அடியார்களுக்கு ரிட்ளேகார்ட் எழுதினன். அவர்கள் நீ அனுப்பியபுத்தகங்களை சுவாமிகள் பலதடவை வாசித்து சந்தோஷித்ததுடன் உன்னைவரும் படியும் கடிதமெழுதச் சொன்னார்கள் மேல்விலாசம் செம்மையாய்தெரியாததால் அசாக்கிரதையாயிருந்து விட்டோமென்று தெரிவித்தனர்கள்.

பிறகு மேற்படி சுவாமிகளைக் காணுததுயரத்துடன் அண்ணுமலையைப் பிரதக்ஷணஞ் செய்து அவ்வாறு செய்யக்கூறிய யோகிஸ்வரரைத் தெரிசித்து சுவாமிதாங்கள் கூறியபடி முடிப்பதற்குக் காரணரான எனது உண்மைக்கருத்தை ஆதியோடந்தமாய்த் தெரிந்தமகான் பூர

ணமாய் விட்டனரே யார் மேற்படி கயிங்கரியத்தைக் கை கூட்டுவாரென்று கேட்க அதற்கு அவர் நாட்டுக்கோட்டை நகரத்தாரே கைகூட்டுவார்களென்று கூறி ஒருகடிதம் எழுதிகொடுத்தனர்-அதைப்பெற்றுக்கொண்டுசிதம்பரம் சென்று மேற்படி சுவாமிகளது மண்டலாபிஷேகம் வரையிலிருந்துகோயிலூராதினம்ஞானதேசிகர்—ஸ்ரீமத் பொன்னம்பல சுவாமிகள் பரிபூரணமாலை என்று ஒருநூல் செய்து மேற்படி சிதம்பரம் மடாலயத்துக்கு இப்போது சுவாதீனக் கர்த்தரான ஸ்ரீமத் ஞானதேசிகர்-கோயிலூர்சுவாமிகளிடம்-முன்னம்சுவாமிகளிடம் ரெயில்சார்ஜிபெற்ற மாமூல் பிரகாரம் ரெயில் சார்ஜி பெற்று திருநெல்வேலி குற்றாலம், திருச்செந்தூர் வரையில் சென்று திரும்பி விசுவாவசுவருஷம் சித்திரை மாதம் சோமவாரம் இரவு 9-மணிக்கு சென்னை வியாசர்பாடியில் மேற்படி சாதுசங்கசாலை கட்டப்படும் தோட்டத்தில் வருஷந்தோறும் நடக்கும் சித்திராபருவ பூசையும் சாதுசங்கசமாராதனமும் நடத்துவதற்கு அடியேனிருப்பிடம் சென்றனன். மேற்படி பூசைக்குரிய ஏற்பாடு ஒன்றும் செய்யப்பட்டிராததில் அங்கு இருக்கக்கூடாவண்ணம் புத்திபேதித்து 12-மணி இரவில் பிரயா

ணப்பட்டு விடியற்காலத்தில் ரெயிலேறி திருக்கழுக்குன்றம் சென்று மேற்படி பூசையைச்செய்து மூன்றும் நாள் மயிலம்வந்து பிறகு வளவனூர் புதுவை முதலிய விடங்களுக்குப்போக முயன்றனன். மயிலத்திலெழுந்தருளிய முருகக்கடவுளுடைய ஆலயத்திற்கு தர்மகர்த்தாவும் கைங்கரியரும் வீரசைவமடாதிபதியுமாகிய *ஸ்ரீமத்-சிவஞானபாலயசுவாமிகள் போகவேண்டாமென்று தடுத்து தம்மிடத்திலேயேயிருந்து கும்பாபிஷேக நெருக்கத்தில் அண்ணாமலைக்கும்போகக் கூறினார்கள். அவர் வாக்கை முருகக்கடவுள்வாக்காகக்கொண்டு தினந்தோறும்முருகக்கடவுளைப் பிரதக்ஷணஞ்செய்து அண்ணாமலை தோத்திரத்தையும் முருகக்கடவுள் தோத்திரத்தையும் எழுதி அ

---

* மேற்படி சுவாமிகள் பொம்மையார் பாளையம பாலையசுவாமிகள் மடம்குருபூசைக்கு அழைத்து போய் சில நாள் வைத்திருந்துகாருணையினுல் வலியவேரெயில் செலவுக்குத்தக்கபடி பொருளுதவிசெய்தனர்கள். பூசைதினத்தில் ஒடுக்க அரையில் சென்று உட்கார்ந்து தியானித்திருந்தபோது—மேற்படிபாலையசித்தர்சுவாமிகளின் உருத்தோற்றம் தெரிசனமாகியது.

ன்பருதவியால் அச்சிட்டு மேற்படி கும்பாபிஷேகதினத் தில்வினியோகிக்கலாகியது நிற்க.

இளமையிலேயேசெனனமரணதுக்கத் துக்குப்பயந் து தனித்துத்தவம் புரியக்காதலுற்ற அடியேன் மேற்ப டி ஞானதேசிகர் ஸ்ரீமத் கோ—சிதம்பரம் சுவாமிகளை யடுத்து தொண்டுபுரிந்து பிக்ஷையிட்டுவணங்கி சித்தசுத் தியும் தனித்திருக்கும் சாதனமும் வாய்த்து உண்மை நிலைவிளங்க கடாக்ஷிக்கவேண்டுமென்று பிராத்தித்த னன். அவர் தன்னைத்தொடர்ந்து கோயிலூருக்கு வரும் படி அழைத்தனர். எனது தாயார்தடையால் பின்னும் கியதில்சிக்கல்ஸ்ரீமத் சுவாமிகளால் உபாசனாமூர்த்தி தி யானங்கூறி பஞ்சதசப்பிரகரணம் கொடுத்து இதுவே வி வேகியைப்படியேறச் செய்யும் மூடனை படியிறங்கச்செய் யும்சாக்கிறதியாய்வாசித்துவா வென்று கூறி பங்குனி உத் திரத்திற்குகோயிலூர்சென்றனர்கள். அவர்போய்விட்டபி றகு அவர் அழைத்தவுடன் போகவில்லையென்ற விசா ரம் பெருகி சென்னை பவழக்காரவீதியிலிருந்த நாட்டுக் கோட்டை செட்டிகளில் ஒருவர் சுவாமிகளிறங்கியிருந்த வீட்டுக்காரர் -ள-ள-ஸ்ரீ அழகப்பசெட்டியாரைக் கண்டு மேல்விலாசம்கேட்டதில் அவர் மேல்விலாசம் கூறுமலே

போனால்வரமாட்டாய் பரதேசியாக்கிவிடுவார்கள்உன்தா யார் துயரமடைவாள் என்று போதித்து எனது சிறியதந்தைக்கு தனதுஇஷ்டரால் தெரிவித்து என்னைப்போகவிடாமல் நிறுத்திவிடச்செய்தனர். மேற்படி சுவாமிகளைப்பார்க்கவேணுமென்ற காதல்பொறுகிலீசுவரவருடம் தைமாதம் மதுரையில் நடந்த கும்பாபிஷேகத்திற்கு சென்று தேடினன். அக்காலம் மேற்படி சுவாமிகள் அங்குவரவில்லை என்னவும் எனது தாயார் அன்னந்தண்ணீரில்லாமல் துயருறுகிறளென்ற சங்கதியால் திரும்பிவிடலாயிற்று. அந்தம்மாள் அடியேன்மேல்வைத்திருந்த பிரியம் இவ்வளவென்று எனது வாயினல் சொல்ல முடியாது. அதுவிபரம் அந்தம்மாள் மேல்செய்த வடிவாம்பிகையம்மாள் முக்திசாதகம் என்ற நூலால் விளங்கும். அது தாயாரைநோகப்பண்ணுபவருக்கு ஒரு தூண்டுகோலாயிருக்கும். நிற்க.

பிரஜோற்பத்தி வருஷம் தைமாசம் சாதுசங்கசாலை கட்டவேணும் என்ற எண்ணம் எழுந்தபடி அடியேன் குடியிருந்தவிட்டண்டை பெரம்பூர் ஹடிரான் ஸ்ரோட்டில் ஏழைச்சிறுவர்களுக்கு கல்விபோதிக்கவும் யாத்திரை சாதுக்களை உபசரிக்கவும் ஒரு சிறு கட்டடம் கட்டி

யும் அது சாதுக்களுக்கு சவுக்கியமுள்ளதல்லவெனத் தோன்றி வியாசர்பாடி க்ஷேத்திரத்தில் எனது சுவாதீனமான 15-காணி நிலத்தில் ஒரு * சிறுகட்டடம் கட்டி சாதுக்களைச்சேர்த்து உபசரிக்கவும் மேற்படி நிலத்தின் வரும்படிமுழுதும் மேற்படி சாதுக்களுக்கே உபயோகிக்கவு முயன்றனன். அம்முயற்சியானது தாயாதியால் தடைப்பட்டு சொத்துக்களும் சின்னபின்ன மாகியது. விபரம் தாயாதிதுன்பசாரம், பஞ்சாயத்தார் குறைதிசபம் அம்மான்சகுனி அல்லல்விருத்தி நிவிர்த்தி, கோர்ட்டினலைச்சல் விளக்கம், மதராஸ் ஐகோர்ட் சர்வசாக்ஷி வெண்பா, பங்காளித் துன்பமில்லாவாழ்க்கை முதலிய

---

* சிறுகட்டடம்—இக்கட்டடத்தில் ஸ்கூல்வைத்திருந்தது—தாயாதிதுன்மார்க்கமாய் உபாத்தியாயரைத் துரத்திவிட்டு சுவாதீனப்படுத்திக்கொண்டு அதிலுள்ள சமாதியரையை பிடித்து விட்டு ஒருவனை குடிக்கூலிக்கு வைத்தனன். அவன் சுவாதீனப்படுத்திக் கொணடதில் அவன் மேல்வியாச்சியம் செய்து எனது சுவாதீனப் படுத்தலாகியது. குடிக்கூலிக்காரன்மோசவிளக்கத்தால் விபரம் விளங்கும். சொந்தவீட்டுக்காரர்கள் அவசியம் பார்க்கவேண்டும்.

வைகளைப்பார்க்கவிளக்கும். தாயாதியையுள்ளவர்கள் அவசியம்பார்க்கவேண்டியது. மேற்படி 15-காணியும் மேற்படிகயிங்கரியத்துக்கு உபயோகமல் தாயாதி எனது சந்ததி முதலினர்கள் கைப்பற்றியதுபோக 3-காணி நிலம் மேற்படி கயிங் கரியத்துக்காக ம-ா-ா-ஸ்ரீ, ராமிபாதூர் மதராஸ் ஐகோர்ட் வக்கில் அனந்தாசாலு அவர்கள் யோசனைப்படி 1897 வருஷம் பத்திரம் எழுதி ரிஜிஸ்டர் செய்துவைக்கலாகியது. இந்த நிலத்தைச் சேர்ந்த தாயாதி முதலினர்வசமிருக்கும் மற்ற நிலங்களும், அதைச்சூழ்ந்திருக்கும் சுமார் 50-60 காணி நிலங்களும் மேற்படி கயிங்கரியத்துக்கு உபயோகிக்கவேணுமென்பது எனது கருத்து. அந்தகருத்தின்படி சிலபுருஷ சிரோமணிகளையடுத்து பொருளுதவிபெற்று மேற்படி நிலங்களைவாங்கவேணுமென்று வேண்டியமுயற்சிகள்செய்தும் கைகூடவில்லை. காலம் நேரிடவில்லை. துஷ்டர்கள் செய்த துன்பங்களிலேயே மொத்துண்ணவேண்டியதாயிருந்தது. இதைப்பற்றியே எனது சிறியதந்தை வாக்கின்படி * இந்திபாசக்ரவர்த்தியையும் கோயிலூராதினர்களையும்பாடலாகியது நிற்க.

---

* சக்கரவர்த்தியைப்பாடி அச்சிட்ட செலவு ரூபா 200 ஆனது இப்படியே மற்றநூல்கள்பாடி அச்சிட்டதற்கு மிகுந்தசெலவு.

சென்னையில் சாதுக்கள் தங்கிபக்தர்களுக்குத்தரிச னந்தரவும் தனித்து தவம் புரியவும் மேற்படி நிலத்துக்கு மிஞ்சின இடம் கிடையவே கிடையாது. மேற்படி நிலம் வியாசர்பாடி ஸ்டேஷனுக்கும் பெரம்பூர்ஸ்டேஷனுக் கும் மத்தியிலுள்ளது டவுனி லுள்ளவர்களுக்கு ரெயில்சிலவு 3 - பை-6 -பை. யாத்திரைவாசிகளுக்கு மலசல நிவிர்த்தி ஸ்நானம் சபதபநிஷ்டை முதலி யவைகளுக்குச் சுகமானவிடம், சஞ்சீவிபோன்ற சுகமு ள்ள காற்றுள்ளது, தென்னஞ்சோலை பனஞ்சோலையுள் ளது, வியாதிநீக்கும் நீரூற்றுத்தடாகமுள்ளது, அத்த டாகத்தில் சித்திரை வைகாசி மாதங்களில் ஸ்நா னம் செய்பவர்களுக்கு வியாதிநீங்கும். அங்கு தனித்து வசித்த ஒருமலையாள பரதேசி பெரு அம்மையால் பிடிக் கப்பட்டு கைகால் முடக்குண்டாகியதில் மேற்படி தடா கத்தில்ஸ்நானஞ்செய்து வியாதிநீங்கப்பெற்றார், அங்குள் ள அரசமரத்தில் சாதமீகமுள்ள சடாமுனிவசிக்கினர், அம்மரத்தினடியில் ஓர்சர்ப்பம்வெகுகாலமாயிருக்கிறது, நடமாடுபவர்க்கு ஆபத்தில்லை, அம்மரத்தையும் அதனடி யிலிருக்கும் நாகபாசத்தையும் சிரத்தாபத்தியுடன் பிரத க்ஷணைசெய்பவருக்குசந்ததியுண்டு, அர்த்தராத்திரியிலும்

தனியாய் வசிக்கலாம், ஒருவர் கூறும்வாக்கியத்தை திரு ப்பிக்கூறும்.மெய்ப்வி கனுமையுமுண்டு.பத்தர்சித்தர்முதலிய சாதுக்கள் மேற்படி இடத்தில் வந்து போகின்றனர்கள், வேதவியா சமகாரிஷி வசித்தவிடம், இரவியீஸ்வரர் எழு ந்தருளியபா னுபுரிக்ஷேத்திரம். ஆதலால் மேற்படி க்ஷே த்திரத்திலேயேமேற்படிசாதுசங்கசாலை கட்டுவதுமிகவும் நன்று, உதவி செய்பவர்க்கும் பெரும்பலனுண்டு. நிற்க.

அடியேன் மதராஸ் முனிசிபாலிடியில் 4 வது டிவி ஷன் ரேட்பேயராயிருப்பதால் (சாஸ்திரிவரி கட்டுதல்) மேற்படி சாதுசங்கசாலையை நீகட்டாமல் பஞ்சவேடம் பூண்டு திரிகிறாயென்று சிலர்பழிக்கக்கூடும்.

அடியேன்ஒருவர்உதவியும்பாராலேசிறுகட்டடம்கட் டி சிலசாதுக்களைச்சேர்த்துதொண்டுபுரிய முயன்றதற்கே எனது ஊழானது

கவி

கல்லவைசெய்யத் தொடங்கினுனேனுமே
யல்லவைவல்லவற்றிற் கொண்டுய்க்குமெல்லில்
வியனெறிச்செல்வாரையாறலைத்துண்பார்
செலவுபிழைத்துய்ப்போல்

என்றபடி.

அவ்வாறு செய்யவிடாமல் தாயாதிபால் சின்னபின்னமு செய்து உத்தியோகத்தையும் வெறுத்து விடச்செய்து மேற்படி சாதுசங்கசாலை கைங்கரியப்பித்தனுக்கியது. இது விபரம் ஸ்ரீபழநியாண்டவர் அஷ்டோத்தரசத மாலையால் விளங்கும். இந்நூலை மேற்படிகோ சிதம்பரம் சுவாமிகள் பார்வையிட்டனர்கள்.

மேற்படி சாதுசங்கசாலை கயிங்கரியத்துக்குச் சில வருடங்களுக்குமுன் ஆஸ்திவார முகூர்த்த நாள் கொண்டும் இடையூறே நேர்ந்தது. பாபராசியுள்ள எம்மாலாகாதாயினும் புண்ணியராசியுள்ள சாதுக்கள்சொத்தாலும் நாட்டுக்கோட்டை நகரத்தார் சொத்தாலும் கைகூடுமென்ற நம்பிக்கையுண்டு. ஆதலால் மேற்படி யார் சொத்துகளைக் கொண்டே மேற்படி கயிங்கரியத்தை ஆரம்பிக்கவேண்டுமென்று தெய்வீகமாய் யாத்திரையாகி திருவண்ணாமலை திருச்செந்தூர் குற்றாலம்வரையில் சென்றமூர்த்திதலம் தீர்த்தங்களையும், சாதுக்களையும் தரிசித்து மேற்படி கயிங்கரியத்தைப் பற்றி ஆங்காங்கு தெரிவிக்க நேர்ந்தது. மேற்படி விண்ணப்பத்தைக் கேள்வியுற்ற சாதுக்கள் முயற்சியை விடாதே சீக்கிரத்திலேயே கைகூடுமென்று கூறினர்கள். அவர்களில் சிலர்கள் போசனம் ரெயில்செலவு முதலியவைகளுக்கும் உள்ளன்புடன்உதவிபுரிந்தனர்கள்.

45524

மேற்படி சாதுசங்கசாலை [illegible]ணியமில்லா
அடியேன் யாவருக்குந்தாழ்ந்த [illegible]
னும் மேற்படி கோ - சிதம்பரம் ஞானதேசிகர் [illegible]க்ஷ
ம்வைத்து பஞ்சதசப்பிரகரணம் கொடுத்து சாக்ரதியாய்
வாசித்து வாவென்று உள்ளன்புடன் கூறியகருணையே
என்னைகவிராயனுக்கியதுடன் சாதிசமயாசாரவுளவையும்
கடவுள் நிச்சயத்தையும் பரோக்ஷமாகவொருவாறுஉண
ரச்செய்தது. எச்ச மயத்தினரையும் நிந்தை கூறஎன
து நாவெழாது. விபரம்சாதிசமயாசார விளக்கத்தில் வி
ளங்கும். சிலமகான்கள் தெரிசனமுமுண்டு. பரிபாகமில்
லாததால் அவர்கள் பின் செல்லக்கூடவில்லை. அப்பரிபா
கம் அடையுநிமித்தமே அடியேனும், மற்றவர்களும்,

கவி

அன்பர்பணிசெய்ய வென்னையாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலைதானே வந்தெய்தும் பராபரமே.

மறமலியுலக வாழ்க்கையே வேண்டும் வந்து நின்
னன்பர் தம்பணியா, றமதுகிடைக்கி லற்புதவானந்த நி
ஷ்டையினிமித்தம், துறவதுவேண்டு மௌனியாயென க்
குத்துயநல்லருடரிலின்னம், பிறவியும்வேண்டும்யானெ
னதிறக் கா பெற்றவர் பெற்றிடும் பேறே— என்று தாயு
மானவர்கூறியபடிசாதுக்கள்தொண்டுசெய்யவே மேற்ப
டிசாதுசங்கசாலைகட்டமுயல்வது. மேற்படிசாலைகைகூடி